உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சை, கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| துணர் ௯ | சீமுக, ஆவணி. | மலர் ரு |
| --- | --- | --- |

உ

## புறநானூற்றாராய்ச்சிக் குறிப்புக்கள்.

R. வேங்கடாசலம் பிள்ளை.

திருவையாற்று அரசர் கல்லூரியின் தலைவர், திரு. டாக்டர். P. S. சுப்பிரமணிய சாஸ்திரிகள் M. A., PH. D., L.T., ஆங்கிலம், வடமொழி, தமிழ்மொழிகளிலுள்ள தமது புலமையைத் துணைக் கொண்டு, தமிழ் இலக்கண இலக்கியங்களை ஆய்ந்து, ஆராய்ச்சியுரைகள் வெளியிட்டு வருவது குறித்தும், தொல்காப்பியம், சங்க விலக்கியம் முதலிய உயர்தர இலக்கண இலக்கியங்களை, மேல் வகுப்பு மாணவர்கட்கு, ஆர்வமுடன் நன்கு கற்பித்து வருவது குறித்தும், தமிழுலகம், அன்னாரை வாழ்த்திவரும் கடப்பாடுடையது.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" எனும்

தமிழ்மறையின் உயரிய நோக்கத்தினைச் சாஸ்திரியாரவர்கள் உட்கொண்டு, தமிழ் இலக்கண இலக்கியங்களை ஆயுங்கால், தமது

கருத்திற்றோன்றும் ஆராய்ச்சிகளை, அவை, எவரது எக்கொள்கைக்கு மாறுபடினும், அவர்களிடத்தே தாம் எத்துணை நன்மதிப்புடையராயிருப்பினும், உண்மை புணர்ச்சியொன்றே கருதி, எட்டுணையும் பின்வாங்காது வெளியிட்டு வருபவர். அங்ஙனமே, தாம் கூறும் ஆராய்ச்சியுரைகளிலும் எவரேனும் மாறுபட்டுரைப்பவற்றை வெறுப்பின்றி ஏற்று, மீண்டும் ஆய்ந்து, பொருத்தமானவைகளை விருப்புடன்கொண்டு, தமது கொள்கைகளை மாற்றிக்கொள்வதிலும் பின்வாங்குவதிலர். இத்தகைய உயர் குணங்களை அவர்கள்பால் நான் நாளும் கண்கூடாகக் கண்டு மகிழ்ந்து வருவதாற்றான், இச்சிறு கட்டுரையை ஈங்கு எழுதப்புகுவேன் ஆயினன்.

அண்மையில், அவர்கள் எனக்கும் எனது உடனுறை ஆசிரிய நண்பர்கட்கும் "A Critical Study of Purananuru" எனும் "புறநானூற்றாராய்ச்சி" யாகிய ஒரு துண்டு வெளியீட்டினை அன்புடன் தந்தருளினர். அதனை வந்தனம்செய்தேற்றுப் படித்துப்பார்த்தேன். இவ்வெளியீட்டின்கண், புறநானூற்றின் 4, 5 ஆம் பாட்டுக்களின் ஆராய்ச்சிகள் காணப்பட்டன. இவ்வாராய்ச்சிகளை முன்பு செந்தமிழிற் பார்த்துளேன். அதுபோதே, அவ்வாராய்ச்சிகளிற் கருத்து வேறுபாடுகள் சில எனக்குத் தோன்றி நின்றன. இப்புதிய வெளியீட்டிலும், அப்பழைய கருத்துக்களே, விரிக்கப்பெற்றிருக்கக்கண்டேன். அவர்களது பிந்திய ஆராய்ச்சிகளிலும், அப்பழைய கருத்து மாறுபடாதது போலவே, அவர்களது புதிய வெளியீட்டிற்கண்ட சில விளக்கங்களாலும் என் கருத்து வேறுபாடுகள் நீங்காவாயின. எனவே, ஒரு தலையான உண்மையுணர்ச்சியைவேண்டி, அவர்களும் பிறரும் ஆய்ந்து தத்தம் கருத்துக்களை வெளியிடுமாறு, என் கருத்து வேறுபாடுகளை, மேற்கண்டவாறு "புறநானூற்றாராய்ச்சிக் குறிப்புக்கள்" என ஈங்குக் குறிக்கின்றேன்.

முதற்கண் நான்காம்பாட்டினை எடுத்துக்கொள்ளுகின்றேன். அவர்களது ஆராய்ச்சியுரைகளும், என் குறிப்புக்களும் நன்கு விளங்குமாறு, அந்த நான்காம் பாட்டினையும், அதன் உரை

யினையும், விசேடவுரையில் இங்கு வேண்டப்படும் பகுதிகளையும், அன்பர்கள் முதற்கண் பார்த்துக் கொள்வதற்குக் கீழே தருகின்றேன். அவற்றுள், இன்றியமையாத விடங்கள் தடித்த எழுத்துக்களாற் காட்டப்படுகின்றன.

வாள், வலந்தர மறுப்பட்டன
செவ்வானத்து வனப்புப்போன்றன.
**தாள், களங்கோளக் கழல்பறைந்தன**
**கோல்ல் லேற்றின் மருப்புப்போன்றன**
தோல், துவைத்தம்பிற் றுளைதோன்றுவ
நிலைக்கொராஅ விலக்கம்போன்றன.
**மாவே, யெறிபதத்தா னிடங்காட்டக்**
கறுழ்பொருத செவ்வாயா
னெருத்துவவ்விய புலிபோன்றன
**களி**று, கதவெறியாச் சிவந்**துராஅய்**
நுதிமழுங்கிய வெண்கோட்டா
னுயிருண்ணுங் கூற்றுப்போன்றன
நீயே, யலங்குளைப் பரீஇ யிவுளிப்
பொலங்தேர்மிசைப் பொலிவுதோன்றி
மாக்கட னிவந்தெழுதருஞ்
செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ
வனையை யாகன் மாறே
தாயி றூவாக் குழவிபோல
வோவாது கூஉநின் னுடற்றியோர் நாடே.

உரை:—

இ-ள். "வாள், வெற்றியைத் தருதலாற் குருதிக் கறைப்பட்டன செக்கர்வானத்தினது அழகை யொத்தன; **கால்புடைபெயர்ந்து போர் செய்து களத்தைத் தமதாக்கிக் கொள்ளுதலால் வீரக்கழல் அருப்புத்தொழில் பறைந்தவை,** கொல்லும் ஆனேற்றினது கோட்டை யொத்தன; பரிசைகள் ஒலித்துத் தைத்த அம்புகளால் துளைதோன்றுவன, நிலையிற்றப்பாத இலக்கத்தை

யொத்தன; குதிரைகள் எதிரியை எறியும் காலமுடையான் இடவாய் வலவாயாகிய இடத்தைக் காட்ட முகக்கருவி பொரப்பட்ட செவ்வாயை யுடைமையான், மான் முதலாயினவற்றின் கழுத்தைக் கவ்வி உதிரம் உவற்றியுண்ட புலியை யொத்தன; களிறுகள், கதவை முறித்து வெகுண்டு உலாவி நுனைதேய்ந்த வெளிய கோட்டையுடைமையான் உயிரை யுண்ணுங் கூற்றை யொத்தன; நீ தான், அசைந்த தலையாட்டமணிந்த கதியை யுடைய குதிரையாற் பூட்டப்பட்ட பொற்றேரின் மேலே பொலிவோடு தோன்றுதலாற் கரியகடலின் கண்ணே ஓங்கியெழுகின்ற செய்ய ஞாயிற்றினது ஒளியையுடையை; அத்தன்மையையாதலால், தாயில்லாத உண்ணுக் குழவி போல ஒழியாது கூப்பிடும் நின்னைச் சினப்பித்தவருடைய நாடு." எ-று.

விசேடவுரையில் இங்கு வேண்டப்படும் பகுதிகள்:—

"வாளாகிய மறுப்பட்டவை எனவும், கழலாகிய பறைந்தவை எனவும், தோலாகிய துளைதோன்றுவ எனவும் கொள்க."

"எறிபதத்தானென்பதற்கு ஒத்துங்காலையுடையானென்று உரைப்பாருமுளர்."

இப்பாட்டிற் கூறப்படும் பொருளினை விளக்கிக் கூறுவேன்.

இப்பாட்டு, 'சோழன் உருவப் பஃறேர் (பல் + தேர்) இளஞ் சேட்சென்னி' என்னும் அரசனைப் பரணர் பாடியது. ஒரு அரசன் மாற்றரசனது நாட்டினைப் போர்செய்து வென்று கொள்வதுபற்றிய செய்திகளைக் கூறுவது வஞ்சித்திணை எனப் படும். அதன் கண்ணுள்ள பல துறை (பிரிவு) களில், அரசன் கீர்த்தியைச் சொல்வதோடு மாற்றார் நாடு அப்போரால் நலிவுற்றுக் கெட்டொழிந்த நிலையினையும் சேரக் கூறுவது, கொற்ற வள்ளை என்னும் துறையாகும்; இப்பாட்டு, அத்தகைய வஞ்சித் திணையுள், கொற்றவள்ளை என்னும் துறையாகும்.

இப்பாட்டில், 'வாள் வலந்தர' என்பது தொடங்கிச் 'செஞ் ஞாயிற்றுக் கவினை' என்னும் துணையும், மன்னவன் புகழ் கூறப் படுகின்றது. அதன் பிற்பகுதியில், பகைவர் நாடு அழிந்தது பற்றிய இரக்கம் கூறப்படுகின்றது.

மன்னவன் புகழ்கூறும் முற்பகுதியினை, இன்னின்ன பொருள், இன்னின்ன காரணத்தால், இன்னின்ன நிலையெய்தி, இவ்விவற்றை ஒத்தன என்னும் முறையில், ஆசிரியர் அழகு பெறக் கூறிச் செல்லுகின்றார். அஃது அமைந்திருக்குமாறு:—

1. வாள்கள், வெற்றியைத் தந்திடப் போர் செய்தன; செய்து குருதிக்கறை (இரத்தக்கறை) கொண்டன; அதனால் அவை செவ்வானத்தை ஒத்தன.

2. வீரக்கழல்கள், தம்மை அணிந்திருக்கும் வீரர்கால்கள் போர்க்களம் எங்கும் சென்று போர் செய்தலால், தம்மீது அரும்பு அரும்பாகச் செய்யப் பெற்ற அருப்புத் தொழில்கள் சிதையப்பெற்றன; அதனால், அவைகள், வழவழவென்றிருக்கும் கொல்லேற்றின் கொம்புகளை ஒத்தன.

3. தோற்பரிசைகள் (கேடகங்கள்), மாற்றார் அம்புகளாற் றுளைகளெய்தப்பெற்றன; பெற்று எண்ணிறந்த துளைகளை எய்தின; அதனால், அம்பு எய்து பழகுவோர், குறியாகவைத்துக் கொண்டு எய்யும் இலக்குப் (Target) போன்றன.

4. குதிரைகள், தம்மீதுள்ள வீரர் தாம் செல்லவேண்டும் இடது பக்கம் வலது பக்கங்களை அறிவிக்கக் கடிவாளத்தை அடிக்கடி இழுக்க, அதனாற் புண்பட்டு இரத்தம் பெருகும் செவ்வாயின ஆயின; அதனால், அவை, குருதியொழுகும்படி பிறவற்றைக் கொன்று தின்று செவ்வாயினையுடைய புலிகளை நிகர்த்தன.

5. யானைகள், போர்செய்து (பகைவர்களை அழித்து எதிர்ப்பாரிலதாகி) இன்னும் அழிப்பதற்குக் கொலைக் கருவியாகிய கோட்டுடன் வெகுண்டு திரிந்தன; அதனால் அவை கூற்றுவனை யொத்தன.

6. அரசன் (பகையிருளை வென்றுவிட்டமையின்) கடலலை போற் செல்லும் குதிரைகள் பூட்டப் பெற்ற தேரின்மீது எதிரின்றிச் சிறப்புடன் விளங்கினன்; அதனால் அவன் (உலக விருளைவென்று) கடலினின்று மேலெழுவது போற்றோன்றும் காலை ஞாயிற்றினை ஒத்தனன்—என்பதாகும்.

இவ்வாறு கூறுமிடத்துக்காணும் பொருள், காரணம், ஆக்கம், ஒப்பு என்ற நாற்பகுதியில், வாள், பரிசை இவற்றின் ஆக்கத்திற்குரிய (காரணமாய) செயல், அவ்வவற்றின் செயலாக இருப்பதும், கழல், குதிரைகள் இவற்றின் ஆக்கத்திற்குரிய (காரணமாய) செயல், வீரர்களின் செயலாக இருப்பதும், யானைகளின் ஆக்கம், அரசன் ஆக்கத்திற்குரிய(காரணமாய)செயல்கள், உய்த்துணரக் கிடப்பதும், ஈண்டு உணர்ந்து கோடற்குரியவை. இவற்ருல் இழுக்கொன்றுமின்மை யறிக.

இனி, ஆராய்ச்சியுரைகளை நோக்குவாம்.

அச்செய்யுளுரையின் மொழி பெயர்ப்பு:—

Swords which were stained (with blood) after having brought victory had the grandeur of the evening sky. Legs whose anklets were deprived of the workmanship after having captured the battle-field resembled the horns of fighting bulls. Leather-shields which were full of holes on account of being pierced through with well-tempered arrows were like unfailing targets. Cavalry which exhibited their strength by their gallop and which had their mouths reddened by the bridle resembled tigers pouncing upon oxen. Elephantry whose tusks had their tips blunted on account of their having dashed against the (fortress) gates with ferocity seemed as if they were the God of Death preying upon the lives of creatures. (Oh King !) Seated brilliantly on the golden chariot drawn by horses with their moving frontlets you appear like the red (morning) sun rising with splendour from the wide sea. Since you are so, the inhabitants of the land of your enemies uninterruptedly are weeping loudly like children bereft of mothers.

I. இம்மொழிபெயர்ப்பில் (தாள்—பறைந்தன எனும்) இரண்டாவது பிரிவிற்குக் கழல் என்பதை எழுவாயாகக்கொள்ளாமல், தாள் என்பதை எழுவாயாகக் கொள்ளுகின்றது ஆராய்ச்சியுரை.

எழுவாய் 'தாள்' அன்று, 'கழலே' என்பது எனது குறிப்பு. எழுவாய் தாளா? கழலா? என நோக்குவாம்.

(1) உரையினைக் காண்க:—கால் புடை பெயர்ந்து போர் செய்து களத்தைத் தமதாக்கிக் கொள்ளுதலால், (காரணம்) வீரக்கழல், (எழுவாய்) அருப்புத்தொழில் பறந்தவை, (ஆக்கம்) கொல்லும் ஆனேற்றினது கோட்டை யொத்தன (ஒப்பு)-எனப் பொருண் முடிபு செல்லுதல் காண்க.

(2) 'போன்றன' என்று 2, 4, 6-ஆம் வரிகளில் வரும் பய னிலைகட்கு உரிய எழுவாய்கட்கும், ஏனை, 9, 12-ஆம் வரிகளில் வந்துள்ள 'போன்றன' எனும் பயனிலைகட்கு உரிய எழுவாய் கட்கும், வேறுபாடு உண்டு. பிந்திய 9, 12-ஆம் வரிகளில் உள்ள பயனிலைகட்கு, மா(க்கள்) களிறு(கள்) என்பனவே எழுவாய் என்பது நன்கு விளக்கிக் கிடக்கின்றது. ஆனால் முன்னைய பகுதிகளில், 'வாள்—மறுப்பட்டன' என்பவையும், 'கழல்—பறைந்தவை' என்பனவும், 'தோல்—துளைதோன்றுவ' என்ப வையும், இணைந்து எழுவாய் ஆதல் விளக்க வேண்டியுள்ளது. இதுபற்றியே, உரையாளர், விசேடவுரையில், 'வாளாகிய மறுப் பட்டவை எனவும், கழலாகிய பறைந்தவை எனவும், தோலாகிய துளைதோன்றுவ எனவும் கொள்க' என இங்கு எழுவாயாவன இவை என எடுத்துக் காட்டுவாராயினர்.

உரையாலும் விசேடவுரையாலும் கழலே எழுவாயாதல் நன்கு தோன்றுதல் காண்க.

ஆயின், இங்கு, வாள், தாள், தோல், மாவே, களிறு, நீயே எனும் இச்சொற்களின் பின் 'கமா' எனும் நிறுத்தக் குறியீடு செய்திருப்பது, இவை எழுவாயாதற்குச் சான்று எனின், அற் றன்று; இது வஞ்சிப்பாட்டாகலின் முதற்கண் நேரசை, நிரை யசை, இயற்சீர்கள் கூன்களாகவந்துள்ளன என்பதறிவித்தற்கே அக்குறியீடுகள் செய்யப் பெற்றனவாதல் காண்க. இது, இச் செய்யுளின் அடிக்குறிப்பாலும், எழுவாய் பயனிலைக்குறியீடுகள் இந்நூலிலும் இன்னனைய பண்டைநூல்களிலும் போடுவதின்மை யானும் அறியலாகும்.

ஆராய்ச்சியுரை, இங்ஙனம் கழலினை எழுவாயாகக் கொள்ளாது தாளினைக் கொண்டதாலே, பின் வருமாறெல்லாம் இடர்ப்பாடு பெறுவதாயிற்று. அவ்வாராய்ச்சி அது பெறுமாறு:—

"The Commentator takes the lines

தாள் களங்கொள கழல் பறைந்தன
கொல் லேற்றின் மருப்புப் போன்றன

to mean, the legs having taken hold of the battle-field, the anklets lost their workmanship and resembled the horns of fighting bulls. The defect in this interpretation is this :— The words மறுப்பட்டன, துளைதோன்றுவ in lines, 1 and 5 are taken to be compound words serving as adjuncts to வாள் and தோல் respectively; but here கழல் பறைந்தன is taken for two separate words and the comparison is taken to be between கழல் and மருப்பு and not between தாள் and மருப்பு. Since the author of the verse speaks of வாள், தோல், மா, களிறு and compares them to செவ்வானம், இலக்கம், புலி and கூற்று, it is necessary that he should speak of தாள் and compare it with மருப்பு.

குறிப்பு:—

முற்காட்டியாங்குக் கழலே எழுவாயாதலால், இங்குக்கூறும் பொருந்தாமைக்குச் சிறிதும் இடனில்லையாதல் காண்க.

இங்ஙனம் பொருந்தாமைகருதிய இவ்வாராய்ச்சி, அதனைப் பொருத்திக் காட்டுமாறு கீழே காண்க.

The point of comparison between தாள் and மருப்பு may be explained thus; Infantry, their legs and anklets are respectively compared to fighting bulls, their horns and the metal caps on them. Just as the horns of fighting bulls have their metal caps deprived of the workmanship on account of the fight, so also the legs of the infantry have their anklets deprived of the workmanship on account of their having taken hold of the battle-field.

இங்கு ஆராய்ச்சியுரைகாட்டும் பொருத்தவுரை, உலக வழக்கு, நூல் வழக்குக்களில் இல்லாத ஒரு புதுமையாகும். வீரர், தாள், கழல்களை, முறையே ஏறு, கொம்பு, கொப்பி (Metal caps) களொடு ஒப்பிட்டுக்காட்டும் பொருத்தம், ஆராய்ச்சியில் நிலைநில்லாது. என்னை?

(அ) பாயும் ஏறுகட்குக் கொம்பு சீவி விடுதலே, உலக வழக்கும், கலித்தொகை முதலாயவற்றிற்காணும் நூல்வழக்குமாகும்.

'சீறரு முன்பினோன் கணிச்சிபோற் கோடுசீய்'—(கலி.101)

'இறைவனது குந்தாலிப் படைபோலக் கொம்புகளைச் சீவி'
(அதனுரை.)

(ஆ) அன்றிக் கொப்பியிடுதல் உலக வழக்கிலுமிலது, நூல் வழக்கிலும் காணப்படாதது; பாய்தற்கு இடையூறாக நிற்பது.

(இ) கழலின் வேலைப்பாடுகள் போன்ற எவையும் கொப்பியிலிருப்பதில்லை; பாய்ந்து தேய்வதுமில்லை.

(ஈ) எழுவாயாகக் கொண்ட தாளுக்கும் மருப்புக்கும் ஒப்புமை கூறுவதில் இங்கு ஒரு சிறப்புமில்லை. தாளிலுள்ள கழலுக்கும், செய்யுளிலில்லாது வருவிக்கப்பட்ட கொப்பிக்கும் கூறும் ஒப்புமையிற்றான் பொருட் சிறப்புள்ளது.

இதுகாறும் கூறியவற்றால், நூலிலுள்ள உரையே பொருந்துவதென்பதும், ஆராய்ச்சியுரைகள் பொருந்தாதன என்பதும் எனது குறிப்புக்களாதல் காண்க. ஆராய்ச்சியுரை, குறிப்புரைகளை ஆய்ந்து, உண்மை காட்டல் அறிஞர் கடன்.

II. இச்செய்யுளுரையில், 'ஆராய்ச்சி' கூறும் மற்றொரு பொருந்தாமைக் கூற்றினை ஆராய்வாம். (1) செய்யுளின் 7-வது வரி (2) அதன் உரை, (3) அவ்வுரைகாரர் விசேட வுரையிற் கூறும் வேறுரைகாரர் கூற்றாகிய **ஒத்தும் காலையுடையான்** எனும் பகுதி இவைகளை நோக்குக.

விளக்கம் :—**எதிரியைக் கோல்லும் 'சமயம்' இது என்று அறிந்த குதிரை வீரர்கள் இடதுபக்கம் வலதுபக்கம் ஆகிய**

இடங்களில் வேண்டும் இடத்தில் குதிரைகளைத் திருப்பக் கடிவாளத்தினை அடிக்கடி இழுக்கின்றார்கள். அதனால் குதிரைகளின் வாய்கள் புண்பட்டுக் குருதி பெருகுகின்றன. அதனால், அவைகள் குருதியை வாயிற் கொண்ட புலிகளை ஒக்கின்றன. என்பது இங்குள்ள பொருள் முடிபு. எறி'பதத்'தான் 'இடங்' காட்ட என்பதற்கு, உரைகாரர், எதிரியை எறியும் 'காலம்' உடையான் 'இடவாய்' 'வலவாய்' ஆகிய 'இடத்தைக்' காட்ட எனத் தெளிவாக எழுதியிருத்தல் காண்க.

அங்ஙனமாகவும் இங்கு ஆராய்ச்சியுரை கூறுவன :—

1. The phrase, 'எறிபதத்தா னிடங்காட்ட' means, according to the commentator 'On the horseman having feet which could destroy foes or which could touch the sides of the horse showing the right and the left direction.

2. When the action contained in the words மறுப்பட்டன in line 1, துளைதோன்றுவ in line 3, சிவந்துராஅய் in line 10 is respectively taken to belong to வாள், தோல் and களிறு, the action contained in இடங்காட்ட is here taken to belong to எறிபதத்தான் and not to மா. This seems to be a defect.

3. Hence the word எறிபதத்தான் may be taken as a word in the third case and the word இடம் may be taken to mean strength so that the phrase may mean 'On the horses showing their strength with their feet which they throw fiercely in their gallop.

4. There seems so be another defect also in the interpretation of the commentator :—மா is in the plural number and எறிபதத்தான் is in the singular number. Since there should be a horseman for every horse, it is not likely that the author could have used the word as the nominative singular, but would have used it as the instrumental plural.

In the meaning given by me, the comparison is very clear. The horses with their mouth reddened in their gallop are like tigers which have in their mouths the bleeding oxen which they have killed.

எனது குறிப்புக்கள்.

1. 'The phrase....................direction'
2. 'When..................................defect'

இம்மொழி பெயர்ப்பில் கண்ட உரை, 'ஆராய்ச்சி' கூறுகிறபடி உரையாசிரியர் தாமே கூறியதன்று; அவர் விசேடவுரையில், வேறொருவர் உரையாகக் காட்டி நெகிழ விட்டிருப்பதாகும். இங்குப் **பதம்** என்பது செவ்வி (ஏற்றகாலம்) ஆகும். ஆகவே, காலம் என்பதற்கும் கால் என்பதற்கும் உள்ள வேறுபாடு காண்க.

வேறுரையின்படி, கால் எனவே கொள்ளினும், ஒத்தும் காலையுடையான், இடம் வலமாகிய இடத்தைக்காட்ட, அவ்வப் பக்கங்களில் ஒத்துதல் செய்து அதனோடு கடிவாளத்தையும் இழுக்க, அதனால் குதிரைகளின் வாயிற் புண்பட்டு இரத்தம் பெருகப் புலியைஒத்தன எனப்பொருள் முடியுமாறும், பொருந்தாமை எதுவும் தோன்றற்கிடனில்லாதவாறுங் காண்க. ஆராய்ச்சியுரை, 'இங்குக் கூறப்படும் செயல் குதிரைகளின் செயலாகவே இருக்கவேண்டும்' எனக்கருதிய பிறழ்ச்சியாற்றான், பொருந்தாமை காணலும், வேறுபொருத்தவுரை கூறலும் நேர்ந்தன.

இப்பாட்டில்வரும் **'செயல்கள்'** எழுவாயாகிய பொருள்களின் செயல்களாகவோ, பிறவற்றின் செயல்களாகவோ இருப்பதால் இழுக்கில்லை என்பது முன்னரே (164-வது பக்கம்) காட்டப்பட்டது.

இனி ஆராய்ச்சிகூறும் பொருத்தவுரையினை ஆய்வோம்.

3. Hence..................................gallop.

இங்குக் குதிரைகள் அணிவகுப்பினிடை நின்று போர் புரிகின்றனவா? அன்றிக் காலொப்போட்டம் (gallop) ஓடிக் குதிரைவென்றி காட்டுகின்றனவா? இங்ஙனம் குதிரைகள்

ஓடித் தம் வலியைக் காட்டுதற்ருழில், அவை அடிக்கடி இழுக்கப்பெறுங் கடிவாளத்தாற் புண்படற்கும் செவ்வாயாதற்கும் புலியை ஒத்தற்கும் இணைந்து நின்று பயன்படாமை காண்க. அன்றி வலிந்து கொண்டாலும் இடம் எனற்கு வலிமை என்ற பொருள்வழக்கு இன்மை அறிக. இது ஆராய்ச்சியாளரும் ஒப்புவது. (செந்தமிழ்).

4. இங்கு ஆராய்ச்சி கூறும் தடையொன்றினை ஆய்வாம்.

There seems.................................plural.

எறிபதத்தான் என்றவிடத்து வந்துள்ள ஒருமை ஒவ்வொரு குதிரைக்கும் ஒருவனே மேலாள் என்பது காட்டும் அரிய முடிபினது. இவ்வொருமை முடிபினை,

" ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகு மிடனுமா ருண்டே " என்ற

எச்சவியற் சூத்திரத்தானும், 'ஏவலிளையர் தாய் வயிறு கரிப்ப' என்ருற்போன்றுவரும் உதாரணங்களாலும் அமைக்கப்பெறும். இங்குக் கூறியவற்ருல் 'எறிபதத்தான் இடங்காட்ட' என்பதன் உரையில் பொருந்தாமை யொன்று மின்றென்பதும், ஆராய்ச்சியின் கருத்தே பொருந்ாதென்பதும் என் குறிப்புக்களாதல் காண்க. இதனையும் அறிஞர்கள் ஆய்ந்து உண்மை கூறுவார்களாக.

இனி இச்செய்யுளில் தடித்த எழுத்திட்டுக் காட்டிய உராஅய், கூஉம் என்ற சொற்களைப்பற்றி ஆராய்ச்சியுரை கூறும் இலக்கணக் குறிப்புக்களை ஆராய்வாம்.

III. ஆராய்ச்சியுரை.

உராஅய் is another form உராஅஇ. Final ய் and இ may be interchanged on the strength of the sutra 'இகர யகர மிறுதி விரவும்.'

குறிப்பு :—இது பொருந்தாது. என்னை? இதனல், ய் என முடியும் எச்சொல்லும் இ என முடியும் என்பதும், நாய்—நாஇ,

தாய்—தாஇ, என்றெல்லாம் எழுதலாகும் என்பதும் பெறப் படுமே! மேற்காட்டிய சூத்திரத்தின் பொருண்முடிபு இதுதானு என ஆராய்வோம்.

'இகர யகரம் இறுதி விரவும்' என்ற சூத்திரம், தொல் காப்பிய மொழிமரபில், உரையாளர்கள் கருத்தின்படி, போலி எழுத்துக்களைக் குறிக்கும் நான்கு சூத்திரங்களுள், இறுதிச் சூத்திரமாகும். அவை:—

1. அகர விகரம் ஐகார மாகும். (இளம்) மொழிமரபு 21

2. அகர வுகரம் ஔகார மாகும். ,, 22

3. அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும். ,, 23

(மேற்சூத்திரங்களொடு வேறுவகையில்
தொடர்புடைய தனிச்சூத்திரம்.) ,, 24

4. இகர யகரம் இறுதி விரவும். ,, 25

இவற்றின் பொருளில், உரைகாரர் பலர்க்கும் பின்னூலோர் பலர்க்கும் கருத்து வேறுபாடுகள் மிகவுள.

1. **சிவஞானமுனிவர் கருத்து**:—அ+ய்+இ=ஐ (1, 3 சூ.) அ+வ்+உ=ஔ (2, 3,) (இரண்டாம் சூத்திரத்து உரையிற் கோடலால் 'வ்' என்பதும் கொள்ளப்படும்.) இவை வட நூலார் கூறும் சந்தியக்கரங்களாகும். அ+ய்+இ=ஐ ஆவ தற்கண் அகரத்திம்பர் என்றதை நன்கு விளக்குதற்பொருட்டு வந்தது, இகர யகரம் இறுதி விரவும் என்னும் சூத்திரம்—என் பனவாகும். இக்கருத்துக்களைச் சிவஞானமுனிவர், நன்னூல், சூத்திர விருத்திகளுட் கூறுமாறு:—

"அகரமும் யகரமும் இகரமும் தம்முளொத்திசைத்து நிற்பதொன்றாகலின், எகர ஏகாரங்களின் பின், ஐகாரமும், அகரமும் வகரமும் உகரமும் தம்முளொத்திசைத்து நிற்ப தொன்றாகலின், ஒகர ஓகாரங்களின்பின், ஔகாரமும் வைக்கப்

பட்டன. இவ்வாறுதல்பற்றி ஏ ஓ ஐ ஔ என்னும் நான் கினையும் வடநூலார் சந்தியக்கரமென்பர்........இக்கருத்தேபற்றி ஆசிரியர் 'அகரவிகரமைகாரமாகும்' 'அகரவுகரமௌகாரமாகும்' எனக் கூறி, ஐயென்னும் நெட்டெழுத்தின் வடிவு புலப்படுதற்கு அகர விகரங்களேயன்றி அவற்றிடையேயகரமுமொத்திசைக்கு மென்பார், 'அகரத்திம்பர் யகரப் புள்ளியும்-ஐயெ னெடுஞ்சினை மெய்பெறத்தோன்றும்' என்றும், இம்பர் உம்பர்என்றாற்போல் வன காலவகை யிடவகைகளான் மயங்குமாகலின், இவற்றின் முதற்கண் நிற்பதியாதோ இறுதிக்கண் நிற்பதியாதோவென் னும் ஐயம் நீக்குதற்கு **இகர யகரம் இறுதி விரவும்** என்றுங் கூறினர்—என்றெல்லாம் எழுதிச் செல்லுதல் காண்க.

இனிப் **பிரயோக விவேக நூலார்** கருத்தும் இதுவே யாதலே 'கூரும் இரச்சுவம்' என்று தொடங்கும் செய்யுளுரையில் இனிச் 'சந்தியக்கரமாவது'............என்றெழுதி வருங்கால், அம்முறை பற்றித் தொல்காப்பியரும், 'அகர விகர மைகாரமாகும்' 'அகர வுகர மௌகாரமாகும்' 'அகரத் திம்பர் யகரப் புள்ளியும் ஐயெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்' எனச் சந்தியக்கரமாக் கேயே கூறினர்' என்றெல்லாம் எழுதுவதால் அறியப்படும்.

'இங்ஙனம் ஐ, ஔ—சந்தியக்கரங்களைப்பற்றியவைகளே இவை எனக் கூறும் ஒரு சாரார் உரையினை நோக்கின், **இகர யகரம் இறுதி விரவும்** என்பது பொருளான் வேறுபட்டு, **உராஅய்** என்பதற்கு ஆராய்ச்சியுரை கூறிய இலக்கண முடிபிற்கு நெடுந் தொலை எட்டி நின்று, ஒரு சிறிதும் பயன்படாமை உணரப்படும்.

இனி, தொல்காப்பியத்திற் கண்ட இச்சூத்திரங்களை **நன் னூலார்**, போலி எழுத்துக்களைக் குறிக்கும் சூத்திரங்களாகப் பொருள் கொண்டார் என்பதும், அவரும் **இகர யகரம் இறுதி விரவும்** எனற்கு வேறு தனிப்பொருள் கொள்ளமல் ஐகாரப் போலியைக் குறிக்கும் துணைச் சூத்திரமாகவே பொருள்கொண் டாரென்பதும், அவர் மேற்கூறிய நான்கு சூத்திரங்களையும் அடக்கி,

* "அம்முன் னிகரம் யகர மென்றிவை
எய்தி னையொத் திசைக்கும் அவ்வோ
டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன" என்று

சூத்திரஞ்செய்ததனுனும், யகரம் நிற்கும் எம்மொழியினிறுதியி லும் இகரம் நின்று பொருளால் ஒக்கும் என்றகருத்தில் சூத்திரம் எதுவும் செய்யாமையானும் அறியப்படும்.

இப்போலி எழுத்துக்கள் பொருந்தா என்பதே நன்னூலார் கருத்தெனலை அந்நூலின் முன்னுரையாளராகிய மயிலைநாதர் கூற்றாலறியலாம். அதனை, அவர் 'போலிசைக்குமெனவே, அவை ஆகா போலியாமெனக் கொள்க' என்று கூறிச் செல்வதால் அறிக. சங்கர நமச்சிவாயப் புலவர் உரையும் அ+ய் ஐ; அ+இ=ஐ—என்பதே யாகும்.

இனி, தொல்காப்பிய உரையாசிரியர்களுள் பேராசிரியர் எழுத்ததிகாரத்திற்கு உரையியற்றினரா எனல் அறியப்படவில்லையாயினும், செய்யுளியலுள், அவர் போலி எழுத்துக்களை தொடை நயம்பற்றி இரண்டோரிடங்களிற் குறித்துளார்.

'எழுத்தோத்தினுள் குறிலும் நெடிலும் உயிரும் உயிர் மெய்யும் இனமூன்றும் சார்பெழுத்து மூன்றுமெனப் பத்தும் இயல்புவகையான் ஆண்டுப் படுத்தோதினன், உயிர் மெய்யும் உயிரளபெடையும் தத்தம் வகையாற் கூடுமாறும், ஐகார ஔகாரம் போலிவகையாற் கூடுமோறும், யாழ் நூலகத்து ஒற்றிசை நீளுமாறும் ஆண்டுத்தோற்றுவாய் செய்தான்' என்றும்,

'ஐகார ஔகாரம் போலிவகையான் அவை' (கிளை எழுத்துக்கள்) என்றும் கூறிச்செல்வதனை நோக்கின், ஐகார ஔகாரங்களையன்றி, 'இகரயகரம் இறுதி விரவும்' என்னும் சூத்திரம் பற்றி வேறு எப்போலி எழுத்தும்கொண்டிலர் என்பது பெறப்படும். படவே, அவரும் அச்சூத்திரத்திற்கு ஐகாரப் போலியின் எழுத்துக்கள்கூடி நிற்கும் முறை கூறுவதாகவே பொருள் கொண்டாராதல் உய்த்துணர்ந்து கொள்ளப்படும்.

---

* 'அம்முன் னிகரம் யகரம் என்றிவை எய்தின்' — என்பது 'இகர யகரம் இறுதி விரவும்' என்பதை யடக்கி நிற்றல் காண்க.

இங்குக் கூறியவற்றானும் உராஅய், உராஅஇ ஆதற்கு, இகர யகரம் இறுதி விரவும் எனும் சூத்திரம் பயன்படாமை உணரப்படும்.

இனி, 'இகர யகரம் இறுதி விரவும்' எனற்கு மேற்கூறியாங்கு ஐகாரச்சந்தியக் காத்திற்குரியதாகவோ, ஐகாரப்போலி எழுத்திற்குரியதாகவோபொருள் கொள்ளாது, தனியேபொருள் கொண்டார் இளம்பூரணரும் அவரைப் பின்பற்றிய நச்சினார்க்கினியரும் இவ்விருவரையும் பின்பற்றி நூலியற்றிய இலக்கண விளக்க நூலாருமே யாவர். அவர்கள் கருத்துக்களும் ஆராய்ச்சியுரைக்கு,எம்மட்டிற்றுணை செய்கின்றனவென இனி ஆராய்வாம்.

இலக்கண விளக்க நூலார் :—

அம்முன் னிகரம் யகர மென்றிவை
யெய்தி னையொத் திசைக்கு மவ்வோ
டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன
**விகர யகர மிறுதி விரவும்**
புகரின் றுணர்ந்தோர் வரைந்தனர் போற்றல். எழுத்-36

"சில எழுத்துக்கள் கூடிச் சில எழுத்துக்கள் போல இசைக்கும் அது கொள்ளற்க என விலக்கும் எழுத்துப் போலிகூறுகின்றது"........ "இகரமும் யகரமும் அவ்வீற்று மொழிகளின் இறுதிக்கண் ஒன்றன்பின் ஒன்று ஓசைவிரவி நிற்கும்." குற்றமின்றி எழுத்திலக்கணத்தை அறிந்தோர் அவ்விகாரங்களைக் கோள்ளாது கடிந்து பாதுகாக்க.

"ஆய், நாய் என்பன ஆய்இ நாய்இ எனவும் வரும். இவை கடிதல் வேண்டுமென்றறியாதார், இவற்றைக் கொள்ளற்பால தாம் போலியென மயங்கும்" என்று கூறுவராயினர்.

இக்காட்டியவற்றாலும், 'இகர யகரம் இறுதி விரவும்' என்ற சூத்திரத்தை, மேற் சூத்திரங்களோடு தொடர்பின்றித் தனிப் பொருளுடையதாக இலக்கண விளக்க நூலார் கொண்டிருப்பினும், அவர் கூறும் பொருளும் காட்டும் உதாரணமும் வேறு என்பதும், ஆராய்ச்சியுரைக்கு முற்றும் மாறுபட்டுளவென்பதும் அறிதலாகும்.

நச்சினார்க்கினியர்:—

"இகர யகரம் இறுதி விரவும்"

இதுவும் போலி கூறுகின்றது. இகரமும் யகரமும் ஒருமொழியின் இறுதிக்கண் ஓசை விரவி வரும். அவ்விகாரங் கோள்ளற்க. நாய், நாஇ எனவரும்.

இவ்வுரையும் ஆராய்ச்சியுரைக்குத் துணைசெய்யாது முற்றும் மாறுபட்டு நிற்றல் காண்க.

இளம்பூரணர்:—'இகர யகரம் இறுதி விரவும்.' இதுவும் ஓர் போலியெழுத்து உணர்த்துதல் நுதலிற்று. 'இகரவீற்று மோழிக்கண் யகரமும் அதுபோல இகரமும் விரவிவரும்'. நாய்—நாஇ எனக் கண்டு கொள்க.

[இங்கு இகர வீற்று மொழிக்கண் என்பது யகர வீற்று மொழிக்கண் என்றிருத்தல் வேண்டும். உதாரணம் கண்டு கொள்க. அன்றி இலக்கண விளக்கம் கூறுவது போல இவ்வீற்று மொழிக்கண் என்றுவதிருத்தல்வேண்டும்.] இலக்கணவிளக்கம் நச்சினார்க்கினியம்போல இங்கு இளம்பூரணர் கோள்ளற்க என்று வெளியாகக் கூறிற்றிலராயினும், இளம்பூரணர் கருத்தும் கோள்ளற்க எனவேயாகும் என்பது கீழே வருவனகொண்டு காண்க.

1 சூ. அகர இகரம் ஐகாரமாகும் என்பதற்கு அவர் கூறிய உரை:—இது போலி எழுத்து ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று. அகரமும் உகரமும் கூடச் சோல்ல, ஐகாரம் போல ஆகும். ஐயர்—அஇயர் என வரும். அது கோள்ளற்க.

இச்சூத்திர உரையில், சில எழுத்துக்கள் ஓசை ஒப்புமையால் சில எழுத்துக்களைப்போல் ஆவது போலி எழுத்தென்பதும், அது கோள்ளத் தக்கதன்றேன்பதும், தடித்த எழுத்துக்களுள்ள சொற்களின் ஆற்றலால் உணர்ந்து கோடலாகும். இங்ஙனம் இச்சூத்திரத்து முடித்துவைத்த பொருண் முடிவையே, மேலே வருஞ்சூத்திரங்கட்கும் அமையுமாறு, 2, 3-ஆம் சூத்திரங்கட்கும், இதுவும் அது என்று கூறியும், இடையிலொரு சூத்திரம் வேறுபொருள்கூறி நிற்பதால், இதுவும் அது

என்னுது, 5-ஆம் சூத்திரத்திற்கு இதுவும் ஓர் போலியெழுத்து உணர்த்துதல் நுதலிற்று என விதந்து கூறியும் அமைத்திருத்தல் உணரப்படும். இது மாட்டேறிதல் எனும் இலக்கணம் ஆகும்.

எனவே, உராஅய்—உஅராஇ என்றெல்லாம் எழுதலாகும் எனும் ஆராய்ச்சியுரை, எவ்வுரையாசிரியர் நூலாசிரியர்கட்கும் உடன்பாடாகாமை யறிக. அன்றியும் நாய்—நாஇ என்றெழுதுவதனை உலக வழக்கிலும் எவருட் ஏற்காமையுங் காண்க.

IV. இனி, செய்யுளிற்றடித்த எழுத்திற் காட்டிய கூஉம் என்பதுபற்றி ஆராய்ச்சியுரை கூறும் இலக்கணம் :—

1. கூஉம் is of the type செய்யும் which was only present tense at the earlier period and not future tense also as at the period of Nannular.

2. Hence 'உ' is a part of the suffix உம் and கூ is the root' One need not mistake உ as an அளபெடை.

3. The use of intervocalic consonants was only optional at the time of Tolkappiyam. This is clear from the sutra

எல்லா மொழிக்கு முயிர்வரு வழியே
உடம்படு மெய்யி னுருபுகொளல் வரையார்
(தொல். எழுத். 141.)

4. and also from the following words found in Velvikudi grants :—காவிரி இன், பூவிரி உம், மலர்மங்கை ஒடு etc.,

இவைபற்றிய குறிப்புக்கள்.

1. செய்யுள் எனும் சொற்குறிக்கும் காலம்யாது?

(அ) செய்யும் என்னும் சொல் நிகழ்காலச் சொல்லாயினும் ஒருகாற் பொதுவாகலுமுடைத்து. இவ்வுண்மையினை,

" முந்நிலைக் காலமும் தோன்று மியற்கை
யெம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்"
என்ற தொல்காப்பியச் சூத்திரத்தானும்,

(ஆ) இளம்பூரணர்:—(இச்சூத்திர—235 உரை.)

'நிகழுங்காலத்துப் பயின்று மூன்று காலத்திற்கும் போது வாகிய செய்யும் என்னுஞ் சொல்.'

(இ) சேனாவரையர்:—(இதன் உரை.)

'முந்நிலைக் காலமும் தோன்றுமியற்கை எம்முறைப் பொருளுமாவன, மலையதுநிலையும், ஞாயிறுதிங்களது இயக்கமும் முதலாயின. அவற்றை இறந்தகாலச்சொல்லானும், எதிர்காலச் சொல்லானும் ஏனை நிகழ்காலச் சொல்லானும் சொல்லாது இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் அகப்படுத்து மூன்று காலத்திற்கும் போதுவாய் நிற்கும் செய்யும் என்னுஞ் சொல்லாற் சொல்லுக' என்றவாறு.

(ஈ) நச்சினார்க்கினியர்:—(இதன் உரை.)

முக்காலத்திற்கும் போதுவாய் முற்றும் எச்சமுமாய் நிற்றலை நோக்கிப் போதுச் சொல்லென்றார்'

(உ) தெய்வச்சிலையார்:—(சூ. 220 உரை.)

'ஈண்டு நிகழ்காலம் குறித்ததென்னை? எதிர்காலங்குறித்து வாராதோ எனின், எதிர்காலத்துக்கண்வருவது காலமயக்கமாகக் கொள்க.'

இக்கூறிய உரைகளானும், செய்யும் என்னுஞ்சொல் பண்டு நிகழ்காலம் ஒன்றே குறித்ததென்பது பொருந்தாதாதலை அறிக.

2. கூஉம் என்பதில் கூ பகுதி உம் விகுதி. கூஉம் அளபெடையன்று—என்ற கருத்தினைப் பார்ப்போம்.

செய்யும் எனும் பெயரேச்சம் பற்றிக் கூறியுள்ள

" செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடுங் கெடுமே யீற்றுமிசை யுகரம்
அவ்விட னறிதல் என்மனார் புலவர் " எனும் தொல்

காப்பியச் சூத்திரப்படி, வாவும் புரவி என்பது, வாம்புரவி என்றாகலாம். இங்கு ஈற்றுமிசை உகரமாகிய (உ) (வ்) என்ற மெய்யொடும் கெட்டுளது. இனி, செய்யும் என்னும் முற்றுப்

பற்றியும் இவ்விதியினை உரைகாரர்கள் காட்டினர். (சூத்திரத் தில்லை.) அதன்படி, புரவிவாம், புரவிபோம்—என்றும் ஆகலாம். மற்றும், உரைகாரர்கள் கூறியபடி, 'கலுழும்' என்றது கலுழ்ம் என்று, ஈற்றுமிசை யுகரமட்டும் கெட்டு நிற்கலாம். இவ்வளவே இச்சூத்திரத்தின்படி கொள்ளப்படும் விதிகள். இவ்விதிகளையே நன்னூலாரும்,

'செய்யுமென் னெச்சவீற் றுயிர்மெய் சேறலும்
செய்யுளு ளும்முந் தாகலும் முற்றேல்
உயிரும் உயிர்மெயும் ஏகலு முளவே' என்று

கூறுவராயினர். இவ்விதிகளின்படி கூ(வு)ம் என்பது (கூம்) என்றாகலாமேயன்றி, ஈற்றுமிசை மெய்ம்மட்டும் ஏக 'கூஉம்' என உயிர் தனித்து நிற்றல் ஆகாமை அறிக. ஆகவே கூஉம் என்பதிலுள் 'உ' விகுதியன்றி அளபெடையே ஆவதாயிற்று. இங்ஙனம் அளபெடுத்தலும் உண்டு எனலை மயிலைநாதர் இச்சூத்திரத்து,

'ஆஅம் எனக்கெளிதென் றன்றுலக மாண்டவன்'

என்று காட்டியிருப்பது கொண்டு எளிதுணரப்படும். (இங்கு உம்' விகுதி என்றுரைத்தற்கிடனில்லையாதல் காண்க.) மற்றும்,

'கராஅங் கலித்தலின் விராஅம் மீனினம்'

'வேஎ மெமக்குள்ள மாஅலே நாஅம்'

'ஆஅம் பூஉ மணிமலர் தொடாஅ'

கராஅம் விராஅம் மராஅம் உராஅம்'

என்றிவ்வாறெல்லாம் வரும் எண்ணிறந்த சான்றுகளால், செய்யும் என்னும்முற்றும் எச்சமும் அளபெழுந்திருத்தல் காணலாகும். இவற்றால் கூஉம் என்பதில் உம் விகுதி என்பதும் அளபெடையன்றென்பதும் பொருந்தாமை யறிக.

3. இனி, உயிரீற்றின் முன் உயிர் வந்து புணருங்கால் உடம்படு மெய்பெறுதல் இன்றியமையாமை யாவதின்று—எனக் கூறும் ஆராய்ச்சியுரையினை ஆய்வாம்.

உடம்படு மெய்பற்றிய சூத்திரம்:—ஆராய்ச்சியிற் காணும்

'எல்லா மொழிக்கும்..................வரையார்' (ப-ம். 176.)

என்பதாகும். இங்கு வரையார் என்பதுபற்றி நீக்கார் என இளம்பூரணரும், நீக்கார், கோள்வர் என நச்சினர்க்கினியரும் உரைத்து உடம்படுமெய் புணர்த்தி உதாரணம் காட்டி முடித்தனர். பின்னர் வரையார் என்றதனால் உடம்படுமெய் கோடல் ஒருதலையன்று என்று கூறி, 'கிளி அரிது' 'மூங்கா இல்லை' எனவும்வரும் என்றனராயினும், இவ்விலக்கு உலக வழக்கிற்கும், உரைநடைக்கும் கொள்ளப்படுவதேயன்றிச் சான்றோர் செய்யுள்கட்கும் இலக்கண நூல்கட்கும் கொள்ளப்படுவதன்று. பண்டைக் காலத்து நூலுள்ளும் செய்யுளுள்ளும், இன்னும் உரைச் செய்யுள் எனப்படும் உரைநடைகளினுள்ளும், உடம்படுமெய் பெறாத உயிரீற்றுமொழிமுன் உயிர் முதல்மொழிகளைக்காண்டல் இயலாது. இவ்வுண்மை பண்டை ஏட்டுச் சுவடிகளால் அறியப்படும். இக்காலத்தே அச்சிடுவோர், படிப்போர்க்கு இனிது விளங்கச், சந்திபிரித்து அச்சிடுகின்றார்களாகலின், இப்பதிப்புக்கள் ஈண்டைக்குக் காட்டாகா.

'உயிரோடு உயிர்க்கு மயக்க மின்று' என்று கூறாத உரையாளர் எவரும் இலர்.

இனி, நமது ஆராய்ச்சியுரை கூறுவது, இங்ஙனம் மொழியொடு மொழி புணர்வது பற்றியதுமன்று. ஒரு மொழியினுள்ளும் உறுப்புக்கள் ஒன்றோடொன்று புணர்வது பற்றியதாகும். 'கூ' என்ற பகுதியும் 'உம்' என்ற விகுதியும் கூடுங்காலை, கூவும் என்று உடம்படுமெய் பெற்று ஒட்டி ஒருமொழியாகாது, கூஉம் எனப்பிரிந்து நிற்குமெனின், போஉம், தாஉம், கூஇஅ, (கூவிய) கடஉள், கூ இ அது, பெரிஅர், சிறிஅர்—என்றிவ்வாறெல்லாம் மொழிகள் காணப்படுமே! இவ்வழக்குக்கள் உலக வழக்கிலாவது செய்யுள் வழக்கிலாவது காணப்படுவனவா? கடவுள், உண்டான், முதலாய பெயர் வினைகளின் உறுப்புக்களைப் பிரிப்பதற்கே தொன்னூல்களில் விதியில்லை. உரைகாரர்களும் பிரித்தலாகாதென்பர். என்னை?

"பிறவும் என்றதனன், முடியாதன உண்டான், கரியன் என்பன. இவை உண் எனவும் கருமை எனவும் பிரித்து நிறுத்தியவழி, ஆனும் அன்னும் குறித்து வரு கிளவியன்மையான் வந்து புணராமையின், புணர்க்கப் படாவாயின" (தொல், எழுத்து. இளம். 484.)

"இனி, 'அன்ன பிறவும்' என்றதனனே, உண்டான் என்புழி உண்ணென்னும் முதனிலையும், காலங்காட்டும் டகரமும் இடனும்பாலும் உணர்த்தும் ஆனும் ஒன்றனேடொன்று புணர்க்கப்படா, அவை நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியு மன்மையின். கரியன் என்புழிக் கருவென நிறுத்தி அன்னெனத் தந்து புணர்க்கப்படா, அது இன்னனென்றும் பொருட்டருதலின் ஏனை வினைச்சொற்களும் இவ்வாறே பிரித்துப் புணர்க்கலாகாமை யுணர்க. (தொல். எழுத். நச். 482.)

எனவே, பெயராக, வினையாக, ஒருமொழி, பிரித்துப் புணர்க்கும் இயல்பினதன்றிச் செறிந்துநிற்கும் உறுப்பினதாகும் என்பது தொல்காப்பிய உரையாளர்கள் கருத்தாகும்.

4. இனி, இவற்றிற்குச் சான்றாகக் காட்டியன, வேள்விக்குடிச்சாசனங்களாகும். சாசன நடைகள் மிகப் பிழைபட்டவை யன்றோ! ந, ன, ண வேறுபாடுகளும், ர, ற வேறுபாடுகளும், ல, ள, ழ வேறுபாடுகளுமின்றி, எளிய இலக்கண அமைதிகளும் அமையப்பெறாது, கல்லில் வெட்டும் தொழில் வாய்ந்தாரும் செம்பில் வெட்டும் தொழில் வாய்ந்தாரும் தம்மனம்போல வெட்டிவைத்திருக்கும் பிற்காலத்துச் சாசனங்களா, புறநானூற்றாராய்ச்சி பற்றிய தொல்காப்பியச் சூத்திரங்கட்குச் சான்று காட்டும் தகவுடையன !

எனவே கூஉம் என்பதுபற்றிய ஆராய்ச்சிகள் அடிப்பட்ட சான்றோர் கொள்கைகள் ஆகாமை யறிக.

இக்கூறிய இலக்கணக் குறிப்புக்களையும் அறிஞர் ஆய்ந்து உண்மை கூறுவார்களாக.



௨

# ஒரு திருக்குறட்பாக் குறிப்பு.

திரு. இ. கோவிந்தசாமி பிள்ளையவர்கள்,
தமிழாசிரியர், திருவையாறு.

(முற்றொடர்ச்சி துணர் 9. மலர் 3. பக்கம் 98.)

அவித்தவனதாற்றலை யொருவாறு முற்றுவித்தாம். இனி அவாவினையவித்த வியாக்ஙனம் என வாராய்வாம். பரிமேலழகர் புலன்களிற் செல்கின்ற அவாவைந்தினையும்—எனக் கூறினர். ஐம்புலன்களிற் செல்கின்ற ஐந்தவாவினையும் எனத் தொகைகொடுத்திலரே புலன்களோடுபடுத்து எனின், ஈண்டாராயற்பாலது அவாவாகலானும், ஒவ்வொரு புலனில் ஒவ்வொரு வவா செல்லுமன்றி யிரண்டு முதலிய செல்லாவாகலினும் அவாவொடுபடுத்திய தொகையினைத் தொடர்புபற்றிப் புலன்கட்கு மேற்றிக்கோடல் ஏற்குமென்க. ஆகலின் அப்பரிமேலழகருக்குமக் கருத்தேயாம்.

புலனெனவே ஐம்புலனென யாவருமெளிதினுணரல் கூடுமாகலின் தொகை கொடுத்துரை வகுத்திலரெனினுமமையும். அவா ஆசை பற்று (நினைவு) என்பனவொருபொருட் கிளவிகளென மேலே யுரைக்கப்பட்டது. திருவள்ளுவர் மேற்றுறவறவியலில் அவாவறுத்தல் எனவொரு வதிகாரமே தனியே வகுத்துள்ளார். அவாப்பொருட்டானே வினைகளும் பிறவிகளும் உண்டாகின்றன. அவாவறுத்தாலன்றி பிறவியறுத்து முத்திப் பேறுற முடியாதென்பதவ்வதிகாரப் பருப்பொருளாம்.

"பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
அற்றோ ருறுவது அறிக" எனும் மணிமேகலையடிகளும் இதனையே வற்புறுத்தும்.

அவாவறுத்தல் :—'அஃதாவது, முன்னும் வினைத்தொடர் பறுத்தார்க்கு நடுவு நின்ற உடம்பும் அதுகொண்ட வினைப்பயன் களும் நின்றமையின் வேதனைபற்றி யொரோவழித் துறக்கப் பட்ட புலன்கண்மேற் பழையபயிற்சி வயத்தான் நினைவு செல்லு மன்றே! அந்நினைவும் அவிச்சையெனப் பிறவிக்கு வித்தாம். ஆகலின். அதனை யிடைவிடாத மெய்ப்பொருளுணர்வான் அறுத்தல்—எனப்பரிமேலழகர் அதிகாரத் தோற்றுவாய் செய் தனர். இதனால் வினை மூவகைப்படும். பிராரர்த்தம் நுகர்வின் பொருட்டாயுள்ளது, ஆகாமியம்—குவிந்து கிடப்பது, சஞ்சிதம் —குவிந்து கிடப்பதினின்று பருவப்பட்டு நுகர்வின் பொருட் டாவது என்பன. இவற்றுள் முன்னையது நுகர்ந்தே தீரப் படுவது என்பது பெரியார் வரலாறுகளா லறியக்கிடக்கும்.

உடம்பு அழிதன் மாலையது, அழிதன் மாலைத்தாய உட லினையே மாறி மாறி யெடுத்துக்கொண்டுழலச் செய்வது வினைப் பயன். வினைப்பயன்றானும் புலன்களிற் செல்லும் அவாவினால் பற்றப்பட்டுப் பொறிவாயிலான் உள்ளம் நுகர்தற் பயத்ததாய் நிற்கும். மனம் விழைவதும் வெறுப்பதும் ஆகிய விரண்டும் ஆன்மாவிற்குரிய வினை (செயல்) உயிர் அழிதற்றன்மைத்தன்று. அழியுந்தன்மைத் தன்றாய வுயிர் நுண்ணுடம்போடுள்ளது. நுண்ணுடல் பருவுடலுடன் வினையினால் தொடர்புறுக்கப் பெறு கின்றது. அப்போதுதான், உயிரின் நுண்ணுடலின்றலைமைத் தாய உளம் பருவுடலின் அறிவுப்பொறி வாயிலாக புலன்களிற் பற்றுதலைச் செய்யும். அஃதுளத்தினியற்கை, அவ்வியற்கையினை நீக்க முயறலே யவாவறுத்தற்பொருட்டாம். இவ்வவாவானது பெரிதும் கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றறியும், ஐம்புலனும் ஒருங்கே வுளவாயவொண்டொடி மடந்தை மாட்டே செல்லும். உலகின்கண்ணுள்ள ஆசையனைத்தும் மண், பெண், பொன் என்று மூவிடத்துமேயுள்ளன. இவற்றுள் பெண்பால்வைக்கும் அவாவே காமமென்றும் இச்சையென்றும், விழைவு, நினைவு என்றும் பலவாறாகக் கூறப்பெறும். அக்ப்பகையாறனுள்ளும் முக்குற்ற மூன்றனுள்ளும் முதல்வத்தாய் முன்னிற்பது காமமே யன்றோ. இவ்வவாவினையறுப்பின் ஏனைய தாமே யொழியும். கம்பரும் இராமாயணத்தில்,

" தூம கேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வரும்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனும்
நாம மில்லை நரகமு மில்லையே." எனவும்

வள்ளுவரும் :—

" காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்
நாமங் கெடக்கெடு நோய்." எனவும்

பரஞ்சோதி முனிவரும் :—

" காமமே கொலைகட் கெல்லாங் காரணம் " எனவும்

கூறுவனவும் பிறவும் இங்கு ஆராயத் தக்கன.

ஆகலின், மக்களியாக்கையை யெடுத்தவர் ஒவ்வொருவரும் அவ்வியாக்கையாலாய பயன்கொள்ள முற்படின் அவாவறுத்தல் வேண்டும்.

அவ்வியாக்கையினியல்பினை, மணிமேகலையில்,

" வினையின் வந்தது வினைக்குவிளை வாயது
புனைவன நீங்கிற் புலால் புறத்திடுவது
மூத்து விளிவுடையது தீப்பிணி யிருக்கை
பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
அவலக் கவலை கையா றழுங்கல்
தவலா வுள்ளந் தன்பா லுடையது
மக்கள் யாக்கை" எனவும்

நாலடியாரில் :—

" தோற்போர்வை மேலுந் துளைபலவாய்ப் பொய்ம்மறைக்கு
மீப்போர்வை மாட்சித் துடம்பானல்—மீப்போர்வை
பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்
பைம்மறியாப் பார்க்கப் படும்." எனவும்

களவியலுரையில்,

"பைம்மறியாப் பார்க்கப் பருந்தார்க்குந் தகைமைத்து"

எனவும், கூறுவனவற்றையும் பிறவற்றையும் முழுமனதுடன்

ஆராய்வராயின் அதன்மாட் டுண்டாம் அவாவறுக்கற்குப் பெரிதும் முயன்று அவாவறுக்கப்பெறுவர். அந்நிலையில் மெய்யுணர்வுண்டாய்,

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு" என்றவாறு

பற்றுதல் கூடும். அது கூட, இறைவனதாற்றலும் அருளும் அறுத்தவருக்குமுண்டாம். "கற்க கசடறக் கற்பவை" என்னுங்குறளின் சிறப்புரையில் பரிமேலழகரும் நிற்றலையிருவகைப் படுத்தி, துறந்துழித் தவத்தான் மெய்யுணர்ந்து அவாவறுத்தலினும் வழுவாமை எனவுங் கூறினர். இதனானும் அவாவறுத்தலே வற்புறுத்தப் பெறுகின்றது. (அறுத்தல்—யாதொரு பொருளே யாதொரு பொருள்பற்றி நிற்கின்றதோ அதனை யறுப்பின் அது அதனெடு தொடர்பு நீங்கும். (விடும்) அதனாற்றான் வள்ளுவரும், ஒருவல், விடல், நீக்கல், என்னுஞ்சொற்களை பெய்யாது அறுத்தல் எனக் கருத்துட்கொண்டு கூறியிருப்பர் போலும். இதுகாறும் அவாவவிக்கு நெறி சிறிதாராய்ந்து கூறினும். இனிமேல், இந்திரனைப் பற்றியாய்வோம்.

இந்திரன் என்னுஞ்சொற்கு—ஆக்கப் பெருக்கமுடையான் என்பது பொருளாம். ஆக்கப் பெருக்கமுடையார்க்கே மேற்கூறிய புலன்களிற் செல்கின்ற அவாவைந்துமிகும்.

"செல்வம் வந்துற்றகாலை; தெய்வமுஞ் சிறிதுபேணர்
சொல்வன வறிந்து சொல்லார்" முதலிய நிகழ்ச்சிகள்

நிகழும். உலகினில் வளம்பட வேண்டதார்! யாருமில்லையன்றே! ஆக்கம் நாடுபவர் அழிவையும் நாடுவரோ? நாடார்! நாடுநிலையினையுடையரு மாவர்போலும்; நூறுபரிமா வேள்வினோற்றுச்செய்யின் அதன் பயனால் இந்திரனிலை வந்தெய்தும் என்பர். இயற்கையானய விந்திரனும், செயற்கையானய விந்திரனுமென விருதிறப் படுவர். முந்நிரி மேற்காணி மிகுவதேற்கீழ் தன்னை யிந்திரனையெண்ணி யிடர்ப் பாடுறுகையில் இந்திரனிலை கிட்டின் அதற்குமேனிலை யுடையனுகக் கருதிப்பெரிது மிடர்ப் பாடுறுவதும் இயற்கையாம் போலும். அப்படியுற்ற நகுடனய விந்திரனும் வேறு; துருவாச முனிவனன் முனியுண்ட முடி

யுடை யிந்திரனும் வேறு ; கௌதமனால் வெகுளிக் கூறப்பட்டுக் கண்ணாயிரம்பெற்ற விந்திரனும் வேறு. ததீசி முனிவர்பா லிரந்து வச்சிரப்படை பெற்ற விந்திரனும் வேறு எனப்புராண வரலாற்றானறியக் கிடக்கும். இந்திரனிலையெய்துவார்க் கிறு மாப்பு மிகுதி யென்பதற்கு யாதொரு தட்டுமின்றாம். பொது வுஞ் சிறப்புமாகிய விவ்விரு வகையானும் இவர்கள் ஐந்தவியாம லாற்றொணுப் பெருந் துயருற்றனர் என்பது வெளிப்படை.

இந்திரன் எத்தகையினன் எனக் குறிக்கப் பட்டதையினி யாராய்வாம். காமமே கண்ணாயினன் யாரெனிற் கடும்பழியுற்ற விந்திரனே யாவன். கற்புக் கணிகலனாய், கட்டழகு மீக்கூர்ந்த வடிவினளாயுள்ள அகலிகையினைப்பற்ற முயன்ற பயனற்ற செய்கையினை யுன்னுகையில், அவ்விந்திரன்,

"புக்கவிடத் தச்சம் போதரும் போதச்சம்
துய்க்குமிடத் தச்சம் தோன்றாமற் காப்பச்சம்
எக்காலும் அச்சந் தருமா லெவன்கொலோ
வுட்கான் பிறனில் புகல்" எனவும்

பகைபாவ மச்சம் பழியென விந்நான்கும்
இகவாவா மில்லிறப் பான்கண் எ-ம்

அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில். எ-ம்

வரும் இலக்கியங்கட்கு இலக்கணமாயினன் என்பது புலப்படா நிற்கும். அவ்வளவு செல்வப் பெருக்கம் இருந்தும் அடாத செயலினால் செல்வச் சிறப்பில்லாத துறவிகளாயுள்ள ஐந்தவித்த முனிவர் முன் பயனற்றதாயிற்று.

"கல்வி தறுகண் இசைமை கொடையெனச்
சொல்லப் பட்ட பெருமித நான்கே" தொல். பொ. மெய். சூ.

இவைகளாற் பெருமிதம் வரல் கூடும். செல்வச் செருக்கால் காமப் பொருட்டால் வரல் கூடுமோ! அங்ஙனம் வரவிரும்பின் அழியாப் பழிக்குத்தான் ஆளாகல் வேண்டும். இதுகாறுங்கூறிய வாற்றால் மேனிலை யெய்தி விட்டோம் என விந்திரனிலை யெய்தினர் காமங் யவாப் பெருக்கிடைவீழ்ந்து அழிவர் என்பது புலப்படுமன்றோ !

இவனெவ்வாற்றான் அமையுஞ் சான்றாயினன் என வாராய்வாம்.

"சான்றோர் தங்கண் எய்திய குற்றம்
தோன்று வழித் தோன்றும் தோற்றம்" எனவும்

"நிரைதொடி தாங்கிய நீடோண் மாற்கேனும்
உரையொழியா வாகுமுயர்ந் தோர்கட் குற்றம்
மரையாகன் றூட்டு மலைநாட! மாயா
நரையான் புறத்திட்ட சூடு" எனவும்

கூறுஞ் சான்றோர் வாக்கின்படி, விசும்புளார் கோமகனும், மருத நிலத்து மாபெருங்கடவுளும் நால்வேறியற்கைப் பதினொரு மூவர்க் கரயனும் ஆகிய இவன் மாட்டுக் காமவழியால் வந்த கேட்டினை "மறைவழிப்பட்ட பழிமொழித்தெய்வம், பறையறைந்தாங் கோடிப் பறக்கும்" என்றாங்கு, மறைக்க முடியாமையின் அமையுஞ் சான்றாயினன் இவன், கண்களைப் பெற்றுக் கரியாயினன். பாம்புருவெய்திச் சான்றாயினன். முடிசிதைக்கப் பெற்றுச் சான்றாயினன். விருத்திர வசுரனொடு சமரிடையாற்றாது புறங்கொடுத்துத் ததீசியைச் சார்ந்து முதுகந்தண்டைப் பெற்றுச் சான்றாயினன். இங்ஙனம் ஆய்ந்தால் இன்னு பலவாற்றில் சான்றாகுவன்.

இனி, இக்குறட் கருத்தினைப் பிற நூலாசிரியர் எங்ஙனங் கொண்டுய்க்கின்றனர் எனத் துருவிப் பார்ப்போம். சாபமும் அருளும் ஒருங்கே பெற்ற நிலையுடையன் இந்திரனே யாவன். இவன் கௌதமரால் யோனிகளாக வுடலமெங்கும் பூக்கப்பெற்றுப் பின்னரவற்றினைக் கண்களாக வருளிச் செய்யவேற்றனன் என்று எல்லா வரலாற்றினும் இவ்வரலாற்றிந் திரனையே சிறப்பாகச் செப்புகின்றனர்.

"விண் குலாவிய விண்ணவ ராயினும்
பெண்கள் காமம் பிடித்தவ ருய்வரோ!
புண்களாகிப் புரந்தரன் மெய்யெ லாம்
கண்க ளானது காமத்தி னா லன்றோ" எனத்

திருக்குற்றாலத் தலபுராணவாசிரியர் இக்குறளை யெடுத்தாண்டுளார்.

" சரந்தரு சாபமல்லாற் றடுப்பருஞ் சாபம் வல்ல
வரந்தரு முனிவனெய்த வருதலும் வெருவி மாயா
நிரந்தரு முலகினிற்கு நெடும்பழி பூண்டா ணின்றாள்
புரந்தர னடுங்கி யாங்கோர் பூசையாய்ப் போகலுற்றான் "

" தீவிழி சிந்தநோக்கிச் செய்ததை யுணர்ந்து வெய்ய
தூயவ னவனை நின்கைச் சுடுசரமனைய சொல்லால்
ஆயிரமாதர்க் குள்ள வறிகுறி யுனக் குண்டாகென்
றேயின னவையெ லாம்வந் தியைந்தன விமைப்பின் முன்னம் "

எல்லையி னுணமெய்தி யாவர்க்கு நகைவந் தெய்தப்
புல்லிய பழியி னோடும் புரந்தரன் போயபின்றை
மெல்லிய லாளை நோக்கி விலைமகளனைய நீயுங்
கல்லியலாதி யென்றான் கருங்கலாய் மருங்கு வீழ்வாள் "

என்பன கம்பர் இராமாயணப் பாடல்களாம்.

ஐந்தும்என்னும் முற்றும்மையும் ஆற்றற்குஎன்னும் நான்கனுருபும் செய்யுள் விகாரத்தாற்றொக்கனவென்றார். மக்களுடம்பெடுத்தார்க்கு ஐம்பொறியும் புலனும் ஐம்புலன்களிற் செல்கின்ற அவாவைந்தும் உண்டன்றோ! ஆகலின் முற்றும்மை விகாரத்தாற்றொக்கதென்றார். இங்ஙனங் கூறுக்கால் ஐந்திற் சிலவ்வாக்களை யவிப்பதனாலும் பயனுண்டோ வெனவைய நிகழும் அவ்வையமறுத்தற்கும், முற்ற அவ்வவா வைந்தனையுமவித்தர் லன்றிப் பயனெய்துதலும் சாபவருள் (சித்திப்பது) உண்டாவதும் கூடாவென்பதற்கும் இங்ஙனங் கூறினர். ஐந்தற்கு மேலும் அவாவின்மையின் முற்றாயிற்று. உம்மையிடைச்சொல் அவாவைந்தினையும் ஒரே காலத்து அடக்கலுமாகாதேயெனின் அபுக்கலாகாது. ஒவ்வொரு புலனிற் செல்லுகின்ற ஒவ்வொரு அவாவினையும் அடக்கின் பின்னர் ஒன்றொன்றாக ஒருவல்கூடும் சிலவவாக்களையவிப்பின் அவற்றால் வருந்துன்பமிலனவன், என எச்சவும்மையின்பாற் படுத்தினுமிழுக்காது ஈண்டு நான்கனுருபு—ஈண்டு, அதற்கு வினையுடைமையென்னும் பொருளில் வந்தது. இதுவரையிலும் ஒரு திருக்குறட்பாக் குறிப்பெனுந் தலைப்பின் கீழ் விரித்துஞ் சுருக்கியும் சிலவரைந்து ஒருவாறு முடித்தாம். பிழையுள்ளன பொறுத்திடுமின்!

" பல்லூழி காலம் பயின்றரனை யர்ச்சித்தால்
நல்லறிவு சற்றே நகும் "

(முற்றிற்று.)

# தம்பிரான் தோழர் தேவாரம்.

துடிசைகிழார், அ. சிதம்பரனார்.

விசயற்கு அருள் செய்வான் சிவபெருமான் பார்வதியோடு வேட்டுவ வடிவம் கொண்டு பன்றியைத் தொடர்ந்து கொன்று அர்ச்சுனனோடு போரிட்டு அவனுக்குப் பாசுபதம் நல்கியருளினார். இதனை உடனிருந்து கண்டவர் சுந்தரர். என்கிறார் நண்பர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் துணர் 9. மலர் 2. பக்கம் 49 அதற்கு ஆதாரம்,

"விசயற் கருள் செய்வான், செருவில்
ஏந்தியோர் கேழற் பின் சென்றும்
செங்கண் வேடனாய் என்னொடும்
வந்தும், மருவி னான்றனை"

என்ற திருவாழ்க்கொளிப்புத்தூர் தேவாரத்தின் பகுதியைக் காட்டுகின்றார்.

இதனால் பிள்ளை அவர்கள், அர்ச்சனனுக்கு சிவபெருமான் அருள் செய்யும்போது, தம்பிரான் தோழர் கூட இருந்தார் என்று எண்ணுகிறார் என்று ஏற்படுகிறது. அப்படி எண்ணியிருந்தால் அது தவறு என்பதைக் காட்டுவாம்.

சிவபெருமான் அடியார்களைக் காப்பாற்றும் பொருட்டு வேடுவ உருவம் தாங்கினது இதுவரை இரண்டு தடவை ஆகும்— ஒன்று அர்ச்சுனனைக் காப்பாற்றும் பொருட்டு, இன்னொன்று தம்பிரான் தோழரைக் காப்பாற்றும் பொருட்டு.

"இருவி னாயக னாகிய மாலுக்கு
அருள்கள் செய்திடும் தேவர் பிரானை,
உருவினானை ஒன்றுவறி யொண்ணா
மூர்த்தியை, விசயற் கருள் செய்வான்
செருவி லேந்தியோர் கேழற்பின் சென்றும்
1
செங்கண் வேடனாய் என்னோடும் வந்தும்

2

மருவினுன் றனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத்தை மறந்து என்னினைக் கேனே''

இப்பாசுரத்தில் சுந்தரர் தான் அர்ச்சுனனுக்கு அருள்செய்யும் போது கூட இருந்ததாகச் சொல்லவில்லை. சிவபெருமான் பார்த்தனுக்காக ஒரு தடவையும் தனக்காக இரண்டாவது தடவையும் வேடுவ உருவம் தாங்கினதைக் குறித்துப்பாடி யிருக்கிறாரே யொழிய வேறின்று.

பார்த்தனுக்கு அருள்செய்த சரித்திரம் பாரதத்திலும் மற்ற நூல்களிலும் விரிவாய்க் காணலாம்.

தேவாரத்திலும் பார்த்தனுக்கு அருள் செய்ததைப் பல இடங்களில் மூவரும் பாடி இருக்கிறார்கள்.

ஆனல், தம்பிரான் தோழருக்காக சிவபெருமான் வேடுவ உருவம் தாங்கினது எங்கே? எதற்காக? என்று சிறிது ஆராய்வாம்.

தம்பிரான் தோழர் அவிநாசியின்கண் முதலைவாய்ப் பிள்ளையை அழைப்பித்துவிட்டு, மேற்கு திருவஞ்சைக்களத்தை நோக்கிச் செல்லுங்கால மத்தியில் உள்ள சிவபெருமான் திருத்தளிகளைத் தரிசித்துப் பாடிச் சென்றார்.

அப்படி அவிநாசிக்கு மேற்கே 25 கல் தூரத்திலுள்ளது திருத்துடிசையம்பதி.

"துடிசையம் பதியை நோக்கிச் சுந்தரர் சென்ற காலை
நெடியவிண் ணேங்குஞ் சோலை நெருங்கிய அடவி சார்ந்து
கடிமிகக் கொண்டு தேர்ந்து கைலையங் கடவுட் போற்றிக்
கொடிவழி பார்த்துச் சென்றார் கோவணன் தோழன் மாதோ.

கதிரவன் நுழைய வொண்ணுக் காட்டிலே போகும் ஆறு
நதியணி கடவுட் டோழன் நம்பியா ரூரன் காணு
தெதிரதி யாரு நேரா தெம்பிரான் றன்னை நோக்கித்
துதியெடுத் தியம்ப லும்மே தொண்டருக் கெளிய னன்று

சொல் லருங்கிராத வேடந் துணைவியுந் தானும் கொண்டு
மெல்லவே நடந்து வந்து மேதினி புகழ அன்று
ஒல்லுநர் தம்மை நோக்கி யுயங்குத லொழித்தி என்று
வல்லுரந் தன்னி னல்ல வழிதனைக் காட்டி யாங்கே
தொல்வினை தீர்க்கு மூதூர் துடிசை யம்பதியி னெல்லை
ஒல்லையே வந்து சேர வும்பருக் கரிய னன்று
வல்லபை யோடும் வானில் மறைதலும் வாக ளூழ்ந்து
தொல்மறை பாடி யாடித் துடிசையை நண்ணி னூரால்''

(துடிசைப் புராணம்—சுந்தரச் சருக்கம்) 16 to 19.

சுந்தரர் துடிசையை நோக்கி விரும் வழியில் அடர்ந்த காட்டினிடத்துச் சிக்கிக்கொண்டு வழி தெரியாமல் அலைகின்றபோது, சிவபெருமான் வேடுவனாக வந்து வழிகாட்டித் துடிசைக்கு அழைத்துச் சென்றார் என்று புராணத்தால் அறிகிறோம்.

இவ்வண்ணம் தனக்கு வேடுவனாகக் காட்சி கொடுத்ததைத் தான் திருவாழ்க்கொளி புத்தூர் தேவாரத்தில் நினைந்து பாடுகின்றார். ஒரு தளியில் கண்ட காட்சியை இன்னொரு தளித் தேவாரத்தில் பாடுவது மூவருடைய வழக்கம். சுந்தரரே திருப்பேரூரில் கண்ட காட்சியை சிதம்பரத் தேவாரத்தில் பாடுகின்றார் :—

"பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்
பலத்தே கண்டா மன்றே''

"சேணார் புரிசை அவிநாசி சேவித் தகன்று துடிசைநகர்
சேரும் வழியால் கானகத்தில் செல்லற் கியலாதே மயங்கு
கோணு கிணைப் பூணணியாகக் கொண்டோ னமலையொடு வேடர்
கோலங் காட்டி வழிதெரிந்துக் கூட்டிக் கோயில் வந்தருளி
சேணாரமுதை நிகரடிசில் இறக்கு முருங்கை யிலைக் கறியும்
செறியும் சுவைய பல்லுணவும் சேருங் கணத்தா லிடவுண்ட
மாணுர் நாவ லூராளி மன்னு வருக வருகவே
மல்கு பெருஞ்சீர் புல்குகின்ற மறையோன் வருக வருகவே''

(சுந்தரர் பிள்ளைத்தமிழ்—வருகைப் பருவம்.)

பிறகு துடிசையைவிட்டு சுந்தரர் பேரூர் சென்று சிவபெருமான் **பள்ளனும் பள்ளச்சியு**மாகக் காட்சிகொடுக்கத் தரிசித்துவிட்டுப் பிறகு திருவஞ்சைக் களம் சென்றார்.

சிவபெருமான் சுந்தரர்க்கு **பள்ளனும் பள்ளச்சியு**மாகக் காட்சி கொடுத்ததைப் பேரூர்ப் புராணம் பள்ளுப் படலத்தில் காண்க.

ஆகையால் சிவபெருமான் இருமுறை வேடுவ உருவம் தாங்கினர் என்பது போதருகின்றது.

மேலும் பார்த்தனுடைய **காலம்** இற்றைக்கு சுமார் 5000 வருடங்கள் ஆகின்றன. இது புராண வரையறைப்படி; சரித்திரப்படி பார்த்தனுடைய காலம் 3400 வருடங்கள் ஆகின்றன.

**சுந்தரர் காலமோ** 8-ம் நூற்றாண்டு அதாவது 7-ம் நூற்றாண்டின் இறுதியும் 8-ம் நூற்றாண்டின் முதலும்—692 to 708 A. D. சுந்தரரை வளர்த்த இரண்டாம் நரசிங்கவர்மன் காலம் 690 to 710 A. D.

பார்த்தனுடைய காலத்துக்கும் சுந்தரருடைய காலத்துக்கும் 2800 வருடங்கள் இடையில் உள்ளன.

ஆகையால் பிள்ளை அவர்கள் கருதும் வண்ணம் பார்த்தனுக்கருள் செய்ததை உடனிருந்து கண்டவர் சுந்தரர் என்பது தவறு என்பதைக் காட்டினும்.

உ

# முதுகண்ணும் தலைக்கோலும்.

T. V. சதாசிவப்பண்டாரத்தாரவர்கள்,
தமிழாசிரியர், வாணாதுறை ஹைஸ்கூல், கும்பகோணம்.

"முதுகண்" என்பது ஆண்டில் முதிர்ந்து, தமது நெருங்கிய கிளைஞர்களாகவுள்ள இளைஞர்களுக்கும் பெண்பாலார்க்கும் அன்னோரது பொருள்களுக்கும் பாதுகாவலர்களாக நிலவிய ஆண்மாக்களுக்குரிய பெயராகப் பண்டைக்காலத்தில் வழங்கிய தொன்றும். இந்நாளில் இத்தகையாரை கார்டியன் (Guardian) என்றும் போஷகர் என்றும் வழங்குகின்றனர். இவற்றுள் கார்டியன் என்பது ஆங்கிலமொழியிலிருந்து தமிழில் வந்து வழங்கும் திசைச் சொல்லாகும். போஷகர் என்பது வடசொல்லாகும். எனவே, தற்காலத்தில் வழங்கும் கார்டியன், போஷகன் என்ற சொற்களது பொருளை யுணர்த்துவதாய் முற்காலத்தில் வழங்கி வந்த சொற்றொடர் "முதுகண்" என்பது பல கல்வெட்டுக்களால் புலப்படுகின்றது. அவற்றுள் சிலவற்றை அடியிற் காண்க.

I

1. ஸ்வஸ்திஸ்ரீ கோச்சடைய வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீசுந்தர பாண்டிய தேவர்க்கு யாண்டு ரு ஆவது விருச்சிக நாயிற்று பூர்வ பட்சத்து சஷ்டியும் புதன் கிழமையும் பெற்ற உத்திராடத்து நாள் வடகரை (2) ராஜராஜ வளநாட்டுப் பொய்கை நாட்டு உடையார் திருமழபாடி உடையார் கோயில் ஆரியக் கண்காணி சாண்டிக்யன் எதிர் ஒப்பிலாதானை சுந்தர பாட்டனும் இவனையே **முதுகண்ணாக** உடைய இவ (3) ன் பிராதா பெருமாள் பிள்ளையான அருளாள பட்டன் மகன் பொன்னார்மேனி பட்டனும் இச்சுந்தரபட்டனையே **முதுகண்ணாகவுடைய** இப்பொன்னார்மேனி பட்டன் மாதா உமையாண்டாளும் இவ்வனைவோம் (4) உடையார்

திருமழபாடியுடைய நாயனார்க்குத் திருமஞ்சனப் புறமாக நாங்கள் கொடுத்த கமுகந் தோட்டமாவது இந்நாயர் தேவ தானம் எடுத்த பாத நல்லூரில் திருவெள்ளறை வதிக்குக் கிழக்கு கொ (5) ந்தக் கன்மாதேவி வாய்க்காலுக்கு வடக்கு நு—கூஉ—சதிரத்து எங்கள் காணியான பள்ளம் என்று பேர் கூவப்பட்ட ஊற்படி நெம்பர் இட இந்நிலம் அரைமாவும் திரு மஞ்சனப் புறமாக நாங்கள் விட்ட (6) மையில் இதுக்குத் திருமஞ்சனம் எடுக்கும் திருமேனிக்கு ஜீவனத்துக்கு வேண்டு வது இந்நாயனார் திருநாமத்துக் காணி விளை நிலத்திலே விட்டு இக்கமுகந் தோட்டம் திருநாமத்துக் காணியாக (7) க்கல் வெட்டிக் கொடுத்தோம்.

South Indian Inscriptions Vol. V. No 649.

இக்கல்வெட்டு, சுந்தரபட்டன் என்பான் தனது உடன் பிறந்தானது புதல்வன் பொன்னார்மேனிபட்டனும் அவனது தாய் உமையாண்டாளுக்கும் "கார்டிய"னை விருந்தனன் என்பதையும் திருமழபாடியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்குத் திரு மஞ்சனத்திற்காக அவர்களால் கமுகந்தோட்டம் ஒன்று நிபந்த மாக விடப்பட்டது என்பதையும் தெரிவிக்கின்றது. இக்கல் வெட்டில் "கார்டியன்" என்ற பொருளில் "முதுகண்" என்பது வழங்கப் பெற்றிருத்தல் அறியத்தக்கது.

II

(1) ஸ்வஸ்ஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் கோனே ரின்மை கொண்டான் உய்யக்கொண்டார் வளநாட்டுப் பாம்பூர் நாட்டு உடையார் திருநாகேஸ்வரமுடையார் கோயில் தேவர் கன்மிக்கும் ஸ்ரீமாகேஸ்வரக் கண்காணி செய்வார்க்கும் ஸ்ரீகாரி யஞ்செய்வானுக்கும் அடுக்களைப் பெண்டுகளில் முப்பு உய்ய வந்தாள் இராஜவிச்சாதிரி இத்தேவர் திருவிழா வெழுந்தருளும் நாட்களில் காவேரியில் தீர்த்தம் பிரசாதிக்க வெழுந் (2) தருளும் திருவீதியும் திருத்தோப்புமாக இவள் இந்நாட்டுச் சுங்கந் தவிர்த்த சோழ நல்லூரில் நறையூர்க் கிழவன் அரையன் நச் சினார்க்கினியன் தில்லையம்பல மூவேந்த வேளானும் பிச்ச தேவன் குனிக்கும் பிரானும் பக்கல் விலைகொண்ட பிரமாணப்

படியும் பிரமதேயம் திருக்குடமூக்கில் பிடாகை வீரசோழ நல்லூரிலும் சோழ சுங்க...........மராம நல்லூரிலும் விருத ராஜ பயங்கர நல்லூரிலும் இவ்வூரோடும் தேவதான இறையிலிமாறிக் கூடின கிழா (3) னடிமங்கலத்திலும் வாணகுல விளக்கமங்கலத்திலும் உடையார் இராஜ ராஜேஸ்வரமுடையார் தேவதான இறையிலி...............மாடிலன் திருச்சிற்றம்பலமுடையான் நக்கனை பொன்வேய்ந்த சோழப் பிரமமாராயன்பேரில் ஆத்திரையன் திருச்சிற்றம்ப முடையான் திருச்சிற்றம்பலமுடையானை நேரியுடைச் சோழப் பிரமமாராயனும் பாரதா...............ண்டனும் வியாக்கிரபாதன் அப்பிரமேகன் கருணாகரனும் இவனையே முதுகண்ணாக வுடைய இவன் பேரன் சொக்கன் ஆராவமுது (4) ...............ப்பெருமானும் கௌதமன் கண்ணன் காரணனும் மாடிலன்மாறன் ஸ்ரீகிருஷ்ண பட்ட சர்வகிருதுவாய வெயாசியாரும் வடுகன் மாதேவ பட்டனும் காரண...................அக்னி சித்தனும் சிவதேவன் சேமனும் விக்னேஸ்வரன் பாண்டனும் தாழை நாராயணனும் மாறன் சாத்தப்பட்ட அக்னி சித்தனும் மாறன் விநாயக தேவனும் பாலாசிரியன் பரமேட்டி ஸ்ரீகிருஷ்ண பட்டனும் இரணியகர்ப்பன் தாமோதரனும் சக்ரபாணி கேசவனும் கவுதமன் ஜாதவேதனை முதுகண்ணாகவுடைய இவன் தம்பி காமக் காணிமாதேவனும் மொகிலியன் திருவ (5) டிகள் சூரியனும் காமக்காணி இளைய சீராமன் வடுகனும் சீராமன் சங்கரனும் திரங்குடையான் உமையவன் திருவுள்ளனும் பக்கல்விலை கொண்ட பிரமாணப்படியும் கவுணியன் யோகேஸ்வரன் வாசுதேவபட்டனும் பூண்டியுடையான் திருச்சிறறம்பலமுடையானுடன் பரிவர்த்தனை பண்ணின நிலத்துக்கு இவர்கள் எழுத்திட்ட தீட்டுப்படியும் சுங்கந்தவிர்த்த சோழ நல்லூரிலும் இவ்வூர் பிரிந்த குலோத்துங்க சோழன் பன்றி மங்கலத்திலும் நறையூர் கிழவன் நச்சினார்க்கினியான் தில்லையம்பல மூவேந்த வேளானும் பன்றிமங்கல முடை (6) யான் பொன்னம்பலக் கூத்தனும் சிங்கள தேவனும் நச்சினார்க்கினியானும் மடப்புறக் குடையான் பெரியானும் இக்கோயில் ஆதிசண்டேஸ்வரதேவர் பாதத்து நீர்வார்த்துக் கொடுத்த நிலத்துக்கு இவர்கள் எழுத்

திட்ட பிரமாணப்படி இந்நிலமாய்......................ஊர்க் கணக்குத் திருக்குடந்தை யுடையான் எழுத்திட்ட கணக்குப்படி பிரமதேயம் திருக்குட மூக்கில் நீர் நிலம் அரையே இரண்டுமா வரைக்காணியும் புன்செய் நிலம் மும்மா வரையே யரைக்காணி முந்திரிகைக் கீழ் முக்காலும் ஆக நிலம் முக்காலே முக்கா(7)ணி முந்திரிகைக் கீழ் முக்காலும் உள்ளன அளக்கக்குறைந்த நிலத்தொ பாதிநிலங் காணியரைக்காணிக் கீழ் முக்காணிக் கீழ் முக்காலே ஒருமா முக்காணியரைக்காணியும் சுங்கந்தவிர்த்த குலோத்துங்க சோழ தேவர்க்குப் பதினாறுவது அளக்கக் குறைந்த நிலத்தொ..................ணி முந்திரிகைக் கீழ்க்காணி அரைக்காணி முந்திரிகைக் கிழெட்டுமாக்காணி அரைக்காணி முந்திரிகையும் ஆக நிலம் முக்காலே மாகாணியரைக்காணிக்கீழ் முக்காலே மாகாணியரைக் காணிக்கீழ்..........................காணி (8) முந்திரிகையும் சுங்கந் தவிர்த்த சோழ நல்லூர்.........நிலம் நாலுமா..............ரைக்காணி முந்திரிகைக் கீழ்.................... குலோத்துங்கசோழன் பன்றிமங்கலத்து நிலமொருமாவின்கீழ் முக்காலே ஒரு மாவும்......................ஒருமா முக்காணி யரைக்காணிக்கீழ் முக்காலே மாகாணியரைக்காணிக்கீழ் முக்காலே காணி முந்திரிகையும் பண்டுடையாரும் பழம்பெரும் உடையார் இராஜராஜேஸ்வர முடையார் தேவதான இறையிலி.............லத்து நின்ற........தேவ..................தேவதான (9) இறையியாய் வரும்படியுந் தவிர்த்து இந்நாட்டுத் திருநாகேஸ்வர நல்லூரோ..............டியுங் கூடின நிலம் இறைகட்டுக்கு.............. தவிர்ந்து பதினாலாவது பசான முதல் நீங்கலாக நீக்கியும் வரியிலாரும் வரிக்குக் கூறுசெய்வார்களும் எழுத்..................னேம் திருவீதியுந் தோப்பும் பதினாலாவது பசான முதல் நீங்கலாகக் கைக்கொள்க எழுதினான் திருமந்திர ஓலை மீனவன் மூவேந்த வேளான் எழுதக் குருகுல ராயரும் பாண்டிய ராயரும் விழி ஓத்தரையரும் பிரதியங்கரை...................மாகோனாரும் எழுத்திட்டுப் பதினாலாவது நாள் (10) முன்னூற்றைம்பது மூன்றினால் பிரசாதஞ் செய்தருளித்து.

**South Indian Inscriptions Vol. VI No. 34.**

இக்கல்வெட்டு, அப்பிரமேகன் கருணுகரன் என்பான் அவனது பேரன் சொக்கன் ஆராவமுதனுக்குக் 'கார்டிய'ணுக இருந்தனன் என்பதையும் கவுதமன் ஜாதவேதன் என்பான் அவனது தம்பி காமக்காணி மாதேவனுக்குக் 'கார்டிய'ணுக இருந்தனன் என்பதையும் உணர்த்துகின்றது. இதில் 'கார்டியன்' என்ற பொருளில் முதுகண் வந்திருத்தல் காண்க.

இனி, கடைச்சங்க நாளில் உறையூர் முதுகண்ணன் சாத்தனுர் என்ற புலவர் ஒருவர் இருந்துள்ளனர். இவர் பாடியனவாகப் புறநானூற்றில் ஐந்து பாடல்களும் குறுந்தொகையில் ஒரு பாட்டும் உள்ளன. (புறம்—27, 28, 29, 30, 325; குறுந்) இவர் யாருக்கு முதுகண்ணுக இருந்தனர் என்பது புலப்படவில்லை. ஆயினும், யாருக்கோ முதுகண்ணுக இருந்த எது பற்றியே இவர் முதுகண்ணன் என்ற பெயர் எய்தியவராதல் வேண்டும். இவர் எந்நிலையிலுள்ளவர்களுக்கும் முதுகண்ணுக இருத்தற்கேற்ற பேரறிவுபடைத்த புலவர் பெருமான் என்பது அருமையும் பெருமையும் வாய்ந்த இவரது பாடல்களால் நன்கறியக் கிடக்கின்றது. 'தேய்தலுண்மையும் பெருகலுண்மையும்—மாய்தலுண்மையும் பிறத்தலுண்மையும்—அறியாதோரையும் அறியக் காட்டித்—திங்கட் புத்தேள் திரிதரும் உலகம்' (புறம் 27) என்பதும் 'நல்லதன் நலனும் தீயதன் தீமையும்—இல்லை யென்போர்க்கினனுகிலியர்' (புறம் 29) என்பதும் இப்பெரியாரது பரந்த அறிவினையும் நல்லியல்பினையும் விளக்குதல் காண்க. எனவே, முதுகண்ணுகத் தேர்ந்தெடுக்கப் பெறுதற்கு இவர் எவ்வாற்ருனும் தகுதியுடையவராவர்.

## தலைக்கோல்.

தலைக்கோல் என்பது அரங்கில் ஏறி ஆடும் நாடகக்கணிகையர்க்குப் பழைய காலத்தில் தமிழ் வேந்தர்களால் வழங்கப் பெற்று வந்த பட்டம் ஆகும். தலைக்கோல் பட்டம் பெற்ற கணிகை தலைக்கோலி என்று கூறப்படுவாள். இச்செய்திகள் பல கல்வெட்டுக்களால் புலப்படுகின்றன. அவற்றுள் இரண்டு கல்வெட்டுக்களை அடியிற் காண்க.

I

(1) ஸ்வஸ்திஸ்ரீ கல்வெட்டும்படி உடையார் திருநெல்வேலி உடையார் கோயில் பதியிலாரில் நக்கன் உரிமை அழகிய பெருமாளான உரிமை அழகி (2) ய பெருமாள் தலைக்கோலி இக்கோயில் லோகத்தால் எழுந்தருளிவித்த சுப்பிரமணியப் பிள்ளையார்க்கும் நாச்சிமார்க்கும் திரிபுவனச் சக்கரவர் (3) த்திகள் ஸ்ரீகுலசேகர தேவற்கு யாண்டு ௰௩ வதின் எதிர் ஒன்பதாமாண்டு ஐப்பசி மாசத்துப் பதினொலாந் தியதி முதல் நாள் ஒன்றுக்கு அமுதுபடி (4) அரிசி குறுணியும் கறியமுது ஐம்பலமும் மிளகமுது இரண்டரைச் செவிடும் நெய்யமுது ஆழாக்கும் அடைக்காயமுது பாக்குப் பன்னிரண்டொடு (5) ம் வெற்றிலை இருபத்து நாலும் திருவிளக்குப் பன்னிரண்டுக்கு நெய் உழக்காழாக்கும் ஆக இவை நித்த நிவந்தமாகச் செல்லவும் திங்கட் திருநா (6) ள் மாசந்தொறுங் கார்த்திகை நாளிலே எழுந்தருளவும் எழுந்தருளினல் படிக்குப்படி இரட்டி அமுது செல்லப் பண்ணுக பெருந் திருநாட் (7) கள் திருத்தேரிலே எழுந்தருளவும் பண்ணுக.

South Indian Inscriptions Vol. V No. 430.

(தொடரும்)

# மதிப்புரை.

பரணர்:—சென்னைப் பல்கலைக் கழகத்தினர் இயற்றிவரும் தமிழாராய்ச்சி வெளியீடுகளில் இது சிறந்த நூலாகும். பரணர் வரலாறுகள், அவர் இயற்றிய பாக்கள், பாக்களிற் காணும் சொன்னயம் பொருணயங்கள், அக்காலத்துப் பழக்க வழக்கங்கள், இலக்கணக் குறிப்புகள் ஆகிய பல திறத்தும் நுணுகி ஆய்ந்து செவ்விய முறையில் எழுதப்பட்டுள்ளது. இதனை இயற்றிய திருவாளர். V. வேங்கடராசலு ரெட்டியார் அவர்களின் உழைப்பையும் புலமைத் திறனையும் இந்நூல் நன்கு தெரிக்கிறது. பல்கலைக் கழகத்தினர் இத்தகைய தொண்டில் நூலாசிரியரை ஊக்கி நலம்புரியும் கடப்பாடுடையர்.

இவ்வரிய நூலைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்திற்கு உதவிய சென்னைப் பல்கலைக் கழகத்தினரின் மேதகவைச் சங்கம் நன்றியுடன் பாராட்டுகிறது.

**சுலோசனை** :—இருமொழிப் புலமையும், மொழி பெயர்க்குந் திறனும் நிரம்பிய திருவாளர். **பண்டிதமணி, மு. கதிரேசன் செட்டியார் அவர்கள்** இயற்றியதாகும். இதன் இரண்டாம் பதிப்பு இத்துணை விரைவில் வெளிவந்ததே இதன் தேவையை விளக்குகிறது.

கற்பினாலாகும் தெய்வத்திறனை சுலோசனையின் கதையினால் சொற்சுவை பொருட்சுவை மலிய எழுதியிருப்பது; மாணவர், மாணவிகளின் மனதைக் கவர்ந்து காவியச் சுவையை ஊட்டுந் தகையது.

இத்தகைய அருந்தொண்டில் பண்டிதமணியவர்களை ஊக்கி வரும் மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையாரின் தமிழ்ப்பணியை யாம் பெரிதும் போற்றுகிறோம்.

**பிளாரன்ஸ் நைடிங்கேல் அம்மையார்** :—**ஜோன் வரலாறு** :—இவ்விரண்டு நூல்களும் திருமதி. நீலாம்பிகை அம்மையார் அவர்களால் இயற்றப் பெற்றவை.

புராணக் கதைகளையே பெரும்பாலும் பயின்றுவரும் நமது பள்ளிச் சிறார்கட்கு இவ்வுத்தமப் பெண்டிரின் உண்மைச்சரிதங்கள் நல் விருந்தாகும். இம்மாதர்களின் பொதுநல நோக்கமும் மனவுறுதியும், அயரா உழைப்பும், வீரச் செயல்களும், செந்நெறிச் செலவும் மாணவர் இளமையிற் கற்கத்தகுவன.

இவை சைவசித்தாந்த தென்னிந்திய நூற்பதிப்புக் கழகத்தினரால் வெளியிடப் பெற்றன.

## புறநானூற்றாராய்ச்சிக் குறிப்புக்களின் பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 160 | 18 | 4, 5 | 4, 5, 6 |
| 163 | 24 | எதிர்ப்பாரிலதாகி | எதிர்ப்பாரிலவாகி |
| 165 | 6 | பறந்தவை | பறைந்தவை |
| 168 | 26 | So be | to be |
| 172 | 28 | கொள்ளமல் | கொள்ளாமல் |
| 174 | 26 | மயங்கும் | மயங்குப |
| 175 | 22 | உகரமும் | இகரமும் |
| 176 | 24 | செய்யுள் | செய்யும் |
| 180 | 12 | இன்னனென்றும் | இன்னனென்னும் |